சர்வசித்து ஹூ சித்திரை மீ




வருட சந்தா ரூ. 2-0-0

உ

முருகா

# திருப்புகழமிர்தம்

## பன்னிரண்டாவது ஆண்டு.

திருமுருகன் திருவருளால் நமது திருப்புகழமிர்தத்திற்குப் பதினோரு ஆண்டுகள் முடிவுபெற்று, சர்வசித்து ஆண்டு சித்திரைத் திங்கள் முதல் நாளாகிய இன்று பன்னிரண்டாவது ஆண்டு பிறக்கின்றது. நமது அமிர்தத்திற்குக் கைம்மாறு கருதாது உழைத்துவரும் பல அன்பர்கட்கும், சந்தாநேயர்கட்கும் எமது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றோம். திருவருள் துணைசெய்வதாக.

சர்வசித்து, சித்திரை முதல் நாள்

அன்பன்
**கிருபானந்தவாரி**

---

## வழி காட்டி:

நக்கீரதேவர் இயற்றிய திருமுருகாற்றுப்படைக்கு எளிய உரையும் விளக்கமும். கலைமகள் ஆசிரியர் வித்துவான் திருவாளர் கி. வா. ஜகந்நாதையரவர்கள் இயற்றியது. இவ்வளவு தெளிவான உரை இதுவரை வெளிவந்ததில்லை. முருகன் அடியார்கள் அனைவரும் அவசியம் படித்துணர வேண்டிய நூல்.

வேண்டுவோர் நமது காரியாலயத்திற்கு முன்பணம் அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும்.

விலை ரூ **2-8-0.** ரிஜிஸ்டர் தபாற்செலவு **0-6-0.**

---

### திருப்புகழமிர்தம் ஆண்டுப் புத்தகங்கள்.

விஷு, சுபானு, தாரண, ஃ பார்த்திப ஆண்டுமலர்கள் மட்டும் தற்சமயம் கிடைக்கும். பிரதி ஒன்றுக்கு ரூ. 2-8-0

விய & தாது ஆண்டுமலர்கள் 1-5-47-ல் கிடைக்கும்

| | | |
|---|---|---|
| விய ஆண்டு மலர் | பிரதி ஒன்றுக்கு | ரூ. 2-12-0 |
| தாது (முதல்) ஆண்டுப் புத்தகம் | ,, | ரூ. 3-0-0 |

ஷை புத்தகங்களுக்குத் தபாற் செலவு பிரதி 1க்கு 0-4-0 ரிஜிஸ்ட்ரேஷன்செலவு 0-3-0 வேறு. மற்ற ஆண்டுப் புத்தகங்கள் கிடைக்காது.

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றன்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

| மலர் ௰உ Vol 12 | சர்வசித்து ஹு சித்திரை மீ 1௳ ஏப்ரல் 1947 | இதழ் க No 1 |
|---|---|---|

## திருப்புகழ்.

### திருவீழிமிழலை.

எருவாய் கருவாய் தனிலே யுருவா
யிதுவே பயிராய் விளைவாகி-
இவர்போ யவரா யவர்போ யிவரா
யிதுவே தொடர்பாய் வெறிபோல;
ஒருதா யிருதாய் பல்கோ டியதா
யுடனே யவமா யழியாதே-
ஒருகால் முருகா பரமா குமரா
உயிர்கா வெனவோ தருள்தாராய்;
முருகா வெனவோர் தரமோ தடியார்
முடிமே லிணைதா ளருள்வோனே-
முனிவோ ரமரோர் முறையோ வெனவே
முதுசூ ரரமேல் விடும்வேலா;
திருமால் பிரமா வறியா தவர்சீர்
சிறுவா திருமால் மருகோனே-
செழுமா மதில்சே ரழகார் பொழில்சூழ்
திருவீ ழியில்வாழ் பெருமாளே.

XII 1

## பதவுரை.

முருகா என – முருகா என்ற திருநாமத்தை, ஓர் தரம் ஓது அடியார் – ஒருமுறை ஓதும்படியான அடியவர்களின், முடிமேல் – சிரத்தின்மீது, இணை தாள் – இரண்டு திருவடிகளையும், அருள்வோனே – அருள்புரிபவரே! முனிவோர் – முனிபுங்கவர்களும், அமரோர் – தேவர்களும், முறையோ என – முறையோ என்று முறையிட, முது சூர் உரமேல் – பழமையான சூரபன்மனுடைய மார்பில், விடும் வேலா – வேலாயுதத்தை விட்டவரே! திருமால் – நாராயணமூர்த்தியும், பிரமா – பிரமதேவரும், அறியாதவர் – அறியமாட்டாதவராகிய சிவபெருமானுடைய, சீர் சிறுவா – சிறப்பு வாய்ந்த குமாரரே! திருமால் மருகோனே – விஷ்ணுமூர்த்தியின் மருகரே! செழுமா மதில் சேர் – செழுமை வாய்ந்த பெரிய மதில்கள் அணைந்தும், அழகு ஆர் பொழில் சூழ் – அழகு மிக்க பூஞ்சோலைகள் சூழ்ந்தும் விளங்கும், திருவீழியில் வாழ் – திருவீழிமிழலை என்னுந் திருத்தலத்தில் வாழ்கின்ற, பெருமாளே – பெருமையின் மிக்கவரே! எருவாய் கருவாய் தனிலே – மலவாயிலுக்கு அருகிலுள்ள கருப்பையிலே, உருவு ஆய் – உருப்பெற்று, இதுவே பயிர் ஆய் – இது ஒரு பயிர் போல், விளைவு ஆகி – விளைந்து மண்ணுலகில் பிறந்து வளர்ந்து, இவர் போய் அவர் ஆய் – இன்ன ஊரிலே இன்ன மரபிலே இன்ன பேருடையரா யிருந்தவர் வேறு ஊரிலே வேறு மரபிலே வேறு பேருடையவராகி, அவர் போய் இவர் ஆய் – அப்படி யிருந்த அவர் மீண்டும் ஊரும் மரபும் பேரும் வேறுடையவராகப் பிறந்து, இதுவே தொடர்பு ஆய் – இப்படியே தொடர்ந்து பிறப்பதும் இறப்பதுமாகி, வெறி போல – அறிவு மயங்கியவன்போலாகி, ஒரு தாய் – ஒரு தாயும், இரு தாய் – இரண்டு தாயும், பல கோடிய தாய் – பல கோடி தாய்களுமாகி, உடனே அவம் ஆய் அழியாதே – உடனே வீணாகி அழிந்துவிடாமற்படிக்கு, ஒருகால் – ஒருமுறையாவது, முருகா – முருகா! பரமா – பரம்பொருளே! குமரா – குமாரக்கடவுளே! உயிர் கா என ஓத – அடியேன் உயிரைக் காத்தருள்வீர் என்று தேவரீரை நோக்கி ஓதி உய்ய, அருள் தாராய் – திருவருளைத் தருவீர்.

## பொழிப்புரை

"முருகா" என்று உள்ளம் உருகி, ஒருமுறை கூறினும் அந்த அடியவரின் சிரத்தின்மீது இரு திருவடிகளையும் வைத்து அருள்புரிபவரே! இருடியரும், இமையவரும், "முறையோ முறையோ" என்று ஓலமிட்டதனுல், நெடுங்காலம் வாழ்ந்த சூரபன்மன் மார்பில் வேலாயுதத்தை விட்டவரே! நாராயணரும் நான்முகனும் தேடியறியவொண்ணாத சிவபெருமானுடைய சிறந்த திருக்குமாரரே! திருமாலின் மருகரே! உயர்ந்த மதிலும், அழகிய பூம்பொழிலும் சூழ்ந்த திருவீழிமிழலை யென்னுந் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! மலவாயிலுக்கு அருகிலுள்ள கருப்பையிலே உருவாகிப் பிறந்து பயிர்போல் வளர்ந்து, பேரும் ஊரும் குலமும் மாறிமாறித் தொடர்பாகப் பிறந்து, மயக்கமுடையவனுகி பலதாய்களை யடைந்து, வீணாக அழியாமல், ஒருமுறையாவது, "முருகா! பரமா! குமரா! அடியேனுடைய உயிரைக் காத்தருள்வாய்" என்று கூறி துதிசெய்து உய்யுமாறு அருள் தருவாய்.



## விரிவுரை

**எருவாய் கருவாய் தனிலே உருவாய்:—**

மலந்தங்குமிடத்திற்கு அருகில் கருப்பை அமைந்துளது. அவ்விடத்தில் கருவளர்ந்து உருப்பெற்று பிறக்கின்றது. தங்கிய இடமும் மலப்பைக்கு அருகில்; இதில் தங்குவதும் மலம். ஆதலினுல் இந்த உடம்போடு இருத்தல் அருவருப்பே. மீண்டும் மீண்டும் இம் மலக்கூட்டை எடுக்காதிருக்க வழிதேடுதல் வேண்டும். இதனையே ஆன்றோர்கள் அடிக்கடி நினைவுசெய்கின்றனர்.

"குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
எலும்பு அணிசரி தசையிரல் குடல்நெதி
குலைந்த செயிர்மயிர் குருதியொ டிவைபல கசுமாலக்
குடில்" —திருப்புகழ்.

ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன்பொதிந்த
பீற்றல் துருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றில் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே
ஏற்றுத் திரிந்துவிட் டேன்இறை வாகச்சி யேகம்பனே.
—பட்டினத்தடிகள்.

**இதுவே பயிராய் விளைவாகி:—**

இந்த உயிரை ஒரு பயிராக அடிகள் உருவகம் புரிகின்றனர். விவசாயி முதலில் நாற்றங்காலில் செந்நெல்லை விதைத்து நெருக்கமாக வளர்ப்பான். அது வளர்ந்து வரும்போது வேறு ஒரு பெரிய நிலத்தை உழுது எருவிட்டு

செம்மைப் படுத்துவன். ஒரு சாண் அளவு நெருக்கமாக வளர்ந்த நாற்றைப் பிடுங்கி பெரிய நிலத்தில் சற்று விரிவாக நடுவான். பின்னர் அப்பயிரிடையே களை (புல்) தோன்றும். ஆட்களைவிட்டு களைபறிப்பன். அவ்வப்போது தண்ணீர் பாய்ச்சுவான். மாடு கன்று பயிரை மேய்ந்து அழிக்காவண்ணம் வேலியிட்டுக் காப்பாற்றுவான். பின்னர் கதிர்தோன்றி முற்றியதும் அறுவடை செய்வான்.

அத்தன்மைத்தேபோல், தாயின் கருப்பமாகிய நாற்றங்காலில் இவ் வுடம்பாகிய பயிர் நெருக்கமாகப் பத்து மாதம் வளர்ந்தது. பின் உலகமாகிய பெரிய வயலில் நாற்றுப்பிடுங்கி நடுவது போல் பிரசூத வாய்வினல் வெளியாக்கப் பட்டது. காமக்ரோதம் முதலிய களைகள் தோன்றுகின்றன. நல்லாசிரியர் அக்களைகளைப் பறிப்பர். அன்பு என்ற தண்ணீரைப் பாய்ச்சுதல் வேண்டும். மலமாயாகன்மங்களாகிய மாடு கன்று மேய்ந்து அழிக்காவண்ணம் ஞானமாகிய வேலியிடுதல் வேண்டும். மோகமாகிய கடுவெய்யில் உண்டாகாவண்ணம் பார்த்து உயிராகிய பயிரைப் பாதுகாத்து வந்தால் சிவகதி என்னும் கதிர் தோன்றும்.

தண்ணீர் இன்மையாலும் வெய்யிலின் வன்மையாலும் பயிர் சாவியாகிவிடும்,

"ஆவி சாவியாகாமல் நீசற் றருள்வாயே"

என்பார் பிறிதொரு திருப்புகழிலே.

சொல்லரசராம் எம் அப்பமூர்த்திகளும் ஒரு பயிர்த் தொழிலைக் கூறும் அழகு ஈண்டு இதனுடன் இணைத்து நோக்கத்தக்கது.

மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச் [பாய்ச்சித்
செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையு மன்றே.

தவராஜ செல்வராகிய தாயுமானரும் ஒரு உழவை மிகவும் அழகாகக் கூறுகின்றனர்.

"காராரும் ஆணவக் காட்டைக் களைந்து, அறக்
கண்டு, அகங்காரம் என்னும்



கல்லைப் பிளந்து, நெஞ்சகமான பூமி வெளி
காணத் திருத்தி, மேன்மேல்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்து, அன்பு நீ ராகவே
பாய்ச்சி, அது பயிராகு மட்டும் மாமாயைவன்
பறவை அணுகாத வண்ணம்
நேராக நின்று, விளைபோகம் புசித்து உய்ந்த
நின்னன்பர்"

இவர்போ யவரா யவர்போ யிவரா
யிதுவே தொடர்பாய் வெறிபோல்:—

எண்ணில்லாத காலமாக எண்ணில்லாத பிறவிகளை எடுத்து வருவதால், ஊரனந்தம்; பெற்ற பேரனந்தம்; ஒவ்வொரு பிறப்பிலும் அந்தந்த பிறப்புக்குரிய குலத்தையும் அவ்வப்பொழுது வந்த நலத்தையும் பெரிதாகக் கருதியும் பேசியும் அலைந்து அழியும்; இத்தகைய தன்மையையுடைய ஆன்மா பித்து பிடித்ததுபோல் பயனின்றி அலைகின்றது.

ஒருதாய் இருதாய் பலகோடியதாய்:—

பிறப்புக்கள் பலவாதலின் அவ்வப் பிறப்புக்களில் வந்த தாய்களும் பலர். பிறவிகள்தோறும் வந்த தாய்மார்கள் தந்த முலைப்பால் முழுவதும் ஒருங்கு கூட்டினல் திருமால் பள்ளி கொண்டிருக்கும் திருப்பாற்கடல் சிறியது என்பர் குருநமசிவாயர்.

எடுத்த பிறப் பெல்லா மெனக்கு வந்த தாய்மார்
கொடுத்தமுலைப் பாலனைத்துங் கூட்டின் —அடுத்தவிறல்
பன்னகணைத் துயிலும் பாலாழியும் சிறிதாம்
மன்னு சிதம்பரதே வா.

"அன்னை எத்தனை எத்தனை அன்னையோ
அப்ப னெத்தனை எத்தனை அப்பனே
பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ
பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ"

என்பார் பட்டினத்தார்.

ஒவ்வொரு பிறப்பிலும் வந்த தாய்மார் முந்நூறு நாள் சுமந்து சுமந்து அயர்வுற்றனர். இனிவரும் தாயரும் அயர்

வுறுவர். ஆதலின் பிறவியைத் தொலைத்தல் வேண்டும். "எண்ணரிய தாய்மார் இளைப்பாற" என்ற அமுதவாக்கை உணர்க.

ஒருகால்முருகா பரமாகுமரா உயிர்காளனவோ தருள்தாராய்:—

சுப்ரமண்ய மூர்த்தியின் திருமந்திரங்களுள் முருக மந்திரமே சிறந்தது. 'சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்' என்ற சூத்திரப்படி "முருகா" என்ற திருநாமத்தை முதலில் வைத்து ஓதினர். இங்ஙனமே கந்தரநுபூதியிலும் மூன்று திருநாமங்களை எடுத்துக் கூறிய இடத்திலும் முருகமந்திரத்தை முதலில் கூறுமாறு காண்க.

"முருகன் குமரன் குகனென்று மொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்"

"தத்துவமசி" எவ்வாறு சாமவேதத்துள் மகாவாக்கிய மாகவிளங்குகின்றதோ அதேபோல் மந்திரங்களுக்குள்மகா வாக்கியம் முருக மந்திரம். நக்கீரதேவர் கூறிய முருகாற்றுப் படையில் "பெரும் பெயர் முருக" என்பார். அத் திவ்யப் பிரபந்தத்திற்கும் நாமம் முருகாற்றுப்படை யென்று முருகமந்திரத்தாலேயே அமைந்துளதும் உய்த்துணர்க.

இனி விழிக்குத் துணை முருகனது திருவடி; பழைய சஞ்சித வினைக்குத் துணை பன்னிரு புயங்கள்; கூற்றுவனூர்க்குச் செல்லும் தனிவழிக்குத் துணை வேலும் மயிலும்; மொழிக்குத் துணை "முருகா" என்ற திருநாமமே.

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே.

—கந்தரலங்காரம்.

'முருகா எனு நாமம்' என்று ஒருமையில் கூறாமல் 'நாமங்கள்' என்று பன்மையில் கூறிய நுணுக்கத்தையும் நுனித்துணர்க.

அன்றியும் பெருமானுடைய தி வதாரத்தைக் கூறுமிடத்திலும் வேறு நாமங்களைக் கூறாமல "ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய" என்று கச்சியப்ப



சிவாசாரிய சுவாமிகள் கூறியருளியதையும் சிந்தித்தல் வேண்டும்.

'முருகா என்று இடையறுது கூறுபவர்க்கு, எல்லோரும் கண்டு அஞ்சுகின்ற கூற்றுவனுடைய முகந் தோன்றுகின்றபோது ஆறுமுகமுந் தோன்றும். அக்கூற்றுவனுடன் ஒருவேளை போர் தோன்றினல் வேலாயுதந் தோன்றும். ஒருமுறை நினைத்தவுடன் இரண்டு திருவடியும் தோன்றும்' என்பர் நக்கீரர்.

அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந் தோன்றும்
வெஞ்சமரந் தோன்றில் வேல்தோன்றும் — நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலுந் தோன்றும்
முருகா என் றோதுவார் முன்.

எத்தனைதான் கூறினும் எத்தனைதான் படித்தாலும் பண்டைய தவம் துணை புரிந்தவர்க்கே "முருகா! முருகா!" என்று ஓதும் பேறு கிடைக்கும். அங்ஙனம் "முருகா!" என்று ஓதும் தவசீலர்க்குக் குறைவற்ற செல்வமும், நோயற்ற வாழ்வும், காலபய மின்மையும், வீடுபேறும் உண்டாகும்.

முருகா எனவுனை ஓதுந் தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வ மடைவார் வியாதி யடைந்துநையார்
ஒருகாலமுந் துன்ப மெய்தார் பரகதி யுற்றிடுவார்
பொருகால னுடு புகார் சமராபுரிப் புண்ணியனே.

— திருப்போரூர் சந்நிதிமுறை.

ஆவியைப் பிரிக்க இயமன் வரும்போது "முருகா! முருகா!" என்று ஓதினல் அவனுடைய பாசக்கயிற்றினல் பயமில்லை. சுவாமிகள் மற்றுமொரு திருப்புகழில் அங்ஙனமே வேண்டுகின்றனர்.

" ஆதிவிதி யோடுபிற மூாதவகை தேடியென
தாவிதனையே குறுகி வருபோது
ஆதிமுரு காதிமுரு காதிமுரு காஎனவும்
ஆதிமுருகா நினைவு தருவாயே"

ஆதலின் உண்ணும்போதும், ஒன்றை எண்ணும் போதும், பேசும்போதும், கந்தம் பூசும்போதும், நடக்கும் போதும், கிடக்கும்போதும், பிறர் நம்மை வையும்போதும்,

தொழில் செய்யும்போதும், எழும்போதும், தொழும் போதும் முப்போதுமட்டுமன்றி எப்போதும் "முருகா! முருகா!" என்று உள்ளம் உருகி உரைத்தல் வேண்டும்.

முருகா என ஓர்தரம் ஓதுஅடியார் முடிமேல் இணைதாள் அருள்வோனே:—

மேலே கூறிய முருக நாமத்தையே அநுவதித்து ஐந்தாவது அடியில் கூறுகின்றனர்.

முருகா என்று ஒருமுறை உள்ளங் குழைந்து ஓதுகின்றவர் சென்னிமேல், வேதாகமங்களுக்கும் எட்டாத திருவடிகள் இரண்டையும் வைத்து எம்பெருமான் இன்னருள் புரிவான்.

சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும்படி தந்தது சொல்லுமதோ
வீடுஞ் சுரர்மா முடி வேதமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே. —அநுபூதி.

"ஆலமுண்ட கோனகண்ட லோகமுண்ட மால்விரிஞ்ச
ரிரணங்க ளாகமங்கள் புகழ்தாளும்" —திருப்புகழ்.

"அண்டத் திறைவன் பொன்முடிக்கும்
அமலக் கமலன் மணிமுடிக்கும்
அமரர் முனிவர் தலைகளுக்கும்
அணியப் பணியக் கிடைக்காத
தண்டைப் பதத்தை எனக்களித்த
தலைவா தாலோ தாலேலோ"
—திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்.

முனிவோ ரமரரோர் முறையோ வெனவே முதுசூ ரரமேல் விடும்வேலா:—

ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகங்களாக ஆண்ட சூரபன்மனது கொடுமைக்கு ஆற்றாத இருடிகளும் இமையவரும் "முருகா! முறையோ! முறையோ!" என்று முறையிட்டனர்.

நண்ணினர்க் கினியா யோலம் ஞானநா யகனே ஓலம்
பண்ணவர்க் கிறையே ஓலம் பரஞ்சுடர் முதலே ஓலம்
எண்ணுதற் கரியா யோலம் யாவையும் படைத்தா யோலம்
கண்ணுதற் பெருமா னல்குங் கடவுளே ஓலம் ஓலம்.



தேவர்கள் தேவே ஓலம் சிறந்தசிற் பரனே ஓலம்
மேவலர்க் கிடியே ஓலம் வேற்படை விமலா ஓலம்
பாவலர்க் கெளியா யோலம் பன்னிரு புயத்தா யோலம்
மூவரு மாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்.

இங்ஙனம் முறையிட்ட அடியவர் முறைக்கிரங்கி முருகவேள் சூரை யட்டு அவர்தம் சீரை நல்கினன்.

திருமால் பிரமா அறியாதவர்:—

மாலும் அயனும் தாமே பரம்பொருள் என்று மயங்கி மலைந்தபோது, அலகில் ஜோதியராம் அண்ணல் அருட்ஜோதித் தாணுவாக நின்றனர். அயனும் மாலும் அருகில் நின்று தேடியும் காணாது திகைத்து நின்றனர்.

மாலோடு நான்முகனும் நேட வளரெரியாய்
மேலோடு கீழ்காணா மேன்மையான் வேதங்கள்
நாலோடும் ஆறங்க நாவூர் மயானத்தெம்
பாலோடு நெய்யாடி பாதம் பணிவோமே.
—திருஞானசம்பந்தர்.

"விதிமா லறியா விமலன் புதல்வா" —அநுபூதி.

அரியயன் அடிமுடி தேடியதுபற்றி திருப்புகழமிர்தம் கூ-வதுமலர் ௱௬-வது பக்கத்தில் காண்க.

செழுமா மதில்சே ரழகார் பொழில்சூழ் திருவீழியில் வாழ் பெருமாளே:—

திருவீழிமிழலை மிகவுஞ் சிறந்த திருத்தலம். திருமால் சக்கராயுதம்பெறுவான்வேண்டி சிவபெருமானை அர்ச்சித்து குறைந்த ஒருமலருக்காகத் தனது விழியை எடுத்து அர்ச்சித்துத் திருவாழி பெற்ற புனிதத் தலம். திருஞானசம்பந்த சுவாமிகட்கும் திருநாவுக்கரசு சுவாமிகட்கும் சிவபிரான் படிக்காசு தந்தருளிய தலமும் இதுவேயாகும்.

## திருமால் திருவாழி பெற்றது.

குபன் என்னும் வேந்தன்பொருட்டு திருமால் ததீசி முனிவர்மீது தனது சக்கரத்தை ஏவினர். அது அவருடைய வச்சிரயாக்கையிற் பட்டு அழிந்தது. அதனால் திருமால் வருந்தி, சலந்தரனை வதைத்த சக்கராயுதம் சிவபெருமானிடம் இருப்பதை யறிந்தனர். அதனைப் பெறுதற்கு

விரும்பி மண்ணுலகில் திருவீழிமிழலை வந்தனர். ஆங்கு சிவலிங்கத்தை எழுந்தருளப்புரிந்து, சிவாகமத்தில் விதித்த வாறு வழிபாடு செய்வாராயினர். நாடோறும் அதிகாலை எழுந்து நீராடி, திருநீறும் கண்டிகையுந் தரித்து ஆயிரந் தாமரைப்பூக்களைக் கொய்து, ஆயிரநாமங்களை அன்புடன் கூறி அர்ச்சிப்பர்; காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஐந் தெழுத்தை ஓதுவர். இவ்வாறு பலகாலம் வழிபட்டு வரும் போது ஒருநாள் அவருடைய அன்பை வெளிப்படுத்த வேண்டி சிவபெருமான் ஒரு மலரை மறைத்தருளினர். இறைவனுடைய திருநாமங்களைக் கூறி அர்ச்சித்துவரும் போது ஒருமலர் குறைந்திருப்பது கண்டனர். அன்பும் உறுதியும்உடைய நாராயணர் உடனே தனது கண்மலரை எடுத்து அர்ச்சித்தனர். அதுகண்ட சிவபெருமான் உள்ளம் உருகி காட்சி தந்தருளினர். திருமால் கருமால் தவிர்க்குங் கண்ணுதற்கடவுள் கழலிணையில் வீழ்ந்து "சிவசிவா! ஹர ஹரா!" என்று ஆராக்காதலுடன் துதித்தனர். சிவபிரான் அவருடைய முதுகைத் தடவி, "மாதவனே! நின் அன்புக்கு மகிழ்ந்தனம். கண்ணை எடுத்து அர்ச்சித்ததால் 'கமலக்கண் ணன்' (புண்டரீகாக்ஷன்) என்னும் நாமத்தைப் பெறுவாய்" என்று அருள் புரிந்து, இழந்த கண்ணையும், விழைந்த சக்க ராயுதத்தையுந் தந்தருளினர்.

வையம் பொதிந்த செங்கனிவாய் மாயோ னன்புக் குண்மகிழ்வுற்
றையன் கையாற் புறநீவி அடியிற் புனைந்த மலர்க்கண்ணு
மெய்த நல்கிச் சுதரிசன மென்னுஞ் சுடரா ழியுமீந்து
செய்ய கமலக்கண்ணனெனும் பெயருஞ் சிறப்பி னுடுமளித்தான்.
—கூர்மபுராணம்.

திருமால் சுடராழி பெற்று, பரஞ்சுடரை வந்தித்து, பண்டுபோல் வைகுந்தஞ் சென்று காத்தற்றொழிலை நடாத் துவா ராயினர்.

கருப்பமிகு முடலடர்த்துக் காலூன்றிக் கைமறித்துக்
கயிலையென்னும்
பொருப்பெடுக்க வுறுமரக்கன் பொன்முடித்தோள்
நெரித்தவிரல் புனிதர்கோயில்
கருப்பமிகு சலந்தரன்ற னுடல்தடிந்த சக்கரத்தை
வேண்டியீண்டு



ஓம் குஹாய நம



# கந்தரலங்காரம்

(மலர் 11- உருஅ- ம்பக்கத் தொடர்ச்சி.)

தொண்டர்கண் டண்டிமோண் டுண்டிருக் குஞ்சுத்த ஞானமருத்
தண்டையம் புண்டரி கந்தரு வாய்சண்ட தண்டவெஞ்சூர்
மண்டலங்கொண்டுபண்டண்டரண்டங்கொண்டுமண்டிமிண்டக்
கண்டுருண் டண்டர்விண் டோடாமல் வேல்தொட்ட காவலனே

பதவுரை

சண்ட – வேகத்தை யுடையவனும், தண்ட – தண்டாயுதத் தைக் கொண்டவனுமாகிய, வெம் சூர் – வெய்ய சூரபன்மனானவன், பண்டு – முற்காலத்திலே, மண்டலம் கொண்டு – மண்ணுலகைக் கைப்பற்றியும், அண்டர் அண்டங் கொண்டு – தேவருலகைக் கவர்ந்

விருப்பொடுமால் வழிபாடு செய்யவிழி விமானஞ்சேர்
மிழலையாமே. —திருஞானசம்பந்தர்.

"அடல்பொருது பூசலை விளைந்திட
எதிர்பொர வொணும லேகசங்கர
அரஹர சிவாமஹாதெ வென்றுனி — அன்றுசேவித்
தவனிவெகு காலமாய் வணங்கியு
ளுருகிவெகு பாசகோச சம்ப்ரம
அதிபெல கடோர மாசலந்தர — னொந்துவிழ
உடல்தடியு மாழி தாவெனம்புய
மலர்கள் தசநூறு தாளிடும்பகல்
ஒருமல ரிலாது கோ வணிந்திடு — செங்கண்மாலுக்
குதவிய மகேசர் பால இந்திரன்
மகளை மணமேவி வீறு செந்திலில்
உரிய அடியேனை யாள வந்தருள் — தம்பிரானே."
—திருப்புகழ்.

## கருத்துரை.

"முருகா!" என்று உருகுபவர்க்கருள்பவரே! சூர சங்கார சுடர்வேலா! சிவகுமாரரே! திருமால் மருகரே! திருவீழிமிழலை வாழ் தேவா! பிறவிக்கடலில் அடியேன் வீழ்ந்து வருந்தா வண்ணம் 'முருகா!' என்று உருகி ஓத அருள் புரிவீர்.

தும், மண்டி மிண்ட கண்டு – மிகவும் நெருக்கியதைப் பார்த்தருளி, அண்டர் உருண்டு விண்டு ஓடாமல் – தேவர்கள் (அச்சத்தினால்) கீழே விழுந்து உருண்டு தமது உலகை விட்டு ஓடாதபடிக்கு, வேல் தொட்ட காவலனே – வேலாயுதத்தை விடுத்தருளிய இரட்சக மூர்த்தியே! தொண்டர் – அடியார்கள், கண்டு அண்டி – ஞானக் கண்ணால் பார்த்து ஞான நெறியால் நெருங்கி, மொண்டு உண்டு இருக்கும் – முகந்து பருகி இன்புற்றிருக்கின்ற, சுத்த ஞான நறு – மெய்ஞ்ஞானமாகிய தேனை யுடைய, தண்டை அம் புண்டரிகம் தருவாய் – தண்டையணிந்த அழகிய தாமரைபோன்ற திருவடியை அடியேனுக்குத் தந்தருளுவீர்.

## விரிவுரை.

தோண்டர்:—

இறைவனைக் கூடும் அன்பினில் கும்பிட்டு, வீடும் வேண்ட விறலின் விளங்குவர் தொண்டர். தொண்டர் பெருமை யாராலும் அளக்கலாகாது, தேவர்களும் தொண்டர்களைக் கண்டால் ஒதுங்கி நிற்பர். "தேவரொதுங்கத் திருத்தொண்டர் மிடையுஞ் செல்வத் திருவாரூர்" என்பர் சேக்கிழாரடிகள்.

"துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்
சோதியே சுகவாரியே.

என்பர் தாயுமானுர்.

இறைவனிடம் யாதொரு பலனுங் கருதாது மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் திருத்தொண்டு செய்யும் தொண்டருள்ளத்தில் இறைவன் தானே விளங்குகின்றுறுதலின் தொண்டர்க்குச் சமானம் யாதொன்றுமில்லை. தொண்டர்க்குச் சமானம் தொண்டரே. அதனாலன்றே திருத்தொண்டர் பெருமையை உலகெலா முணர்ந்துய்யும் பொருட்டு, திருக்கைலாய மலையிலிருந்து தமக்கு அணுக்கத்தொண்டு செய்திருந்த ஆலாலசுந்தரரை மண்மிசையனுப்பி சிவபெருமான் திருத்தொண்டத் தொகையைப் பாடுவித்தார். ஆனபடியால் எல்லோரும் இறைவனுக்குக் கூடுமளவில் திருத்தொண்டு செய்தல் வேண்டும்.



கண்டு அண்டி:—

இறைவனை மூவருந் தேவரு முயன்றாலுங் காண்பதற்கரிது. ஆனால் தொண்டர்க்கு எளிது.

"தொடுத்த மலரொடு தூபமுஞ் சாந்துங் கொண்டு எப்பொழுதும் அடுத்து வணங்கும் அயனொடு மாலுக்குங் காண்பரியான்" என்பார் அப்பமூர்த்திகள். அத்தகைய பரம்பொருளை தொண்டர் நெருங்கிக் கண்டு களிப்பர்.

மோண்டு உண்டு இருக்கும்:—

இறைவனிடம் நெருங்கி இறைவனுடைய அருளமுதத்தை நிரம்ப அள்ளி மொண்டு பருகி இன்புற்று செம்மாந்திருப்பர் திருத்தொண்டர் "வழங்குகின்றாய்க்குன் அருளாரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன்" என்றார் மணிவாசகர். அங்ஙனம் தாம் உண்டதோடு அமையாது, அருளமுதை உண்ணாது பவப்பிணியால் வாடி உறங்கிக் கிடக்கும் உயிர்களையெல்லாம் தட்டி எழுப்பி, "அகண்டாகார சிவபோகமெனும் பேரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏக உருவாய்க் கிடக்குது; ஐயோ! இன்புற்றிட நாம் இனியெடுத்த தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாரும்" என்று அறைகூவி அழைப்பர். "நான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்" என்பது திருத்தொண்டர் மரபு. தன்னல நீக்கமும் பொதுநல ஆக்கமும் பூண்டவர்.

சுத்த ஞான நறு தண்டையம் புண்டரிகம்:—

தாமரையில் தேன் துளிக்கும்; இறைவனுடைய திருவடியாகிய தாமரையில் ஞானமாகிய தேன் துளிக்கும்.

"உருவிலாத பாழில் வெட்ட
வெளியிலாடு நாத நிர்த்த
உனது ஞான பாதபத்ம முறுவேனோ"

என்றதிருப்புகழடியை ஈண்டு சிந்தித்துணர்க. ஞானமாகிய திருவடியை ஞானத்தினாலேயே பெறுதல் கூடும். அதனாலேயே "ஞானமலது கதி கூடுமோ" என்பார் தாயுமானுர்.

ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே. —திருமந்திரம்.

“ஞானமே வடிவாய் தேடுவார் தேடும் நாட்டமே” என்றும் அழகுபெறக் கூறினர் அனுபவஞானியாகிய தாயுமானுர்.

ஞானத்தேன் ஊற்றெடுக்கும் இடம் இறைவன் திருவடியாகலின் அத்திருவடியைப்பற்றி சுவாமிகள் பிறிதோரிடத்தில் கூறுமாறு காண்க.

“வரிய பதத்தினின் அருவி இருப்பிடம்
அமையு மெனக்கிட முனது பதச்சரண்” —திருப்புகழ்.

திருவடியின் பெருமையை மிகநன்ருகக் கூறுவர் திருமூலர்.

திருவடியே சிவமாவது தேரில்
திருவடியே சிவலோகஞ் சிந்திக்கில்
திருவடியே செல்கதியது செப்பில்
திருவடியே தஞ்சமுட் டெளிவார்க்கே.

திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்கும்
திருவடி ஞானஞ் சிறைமல மீட்கும்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே.

முருகவேள் திருவடியில் பிரணவநாதஒலியுடன் கூடிய மணித்தண்டை விளங்கும். “அணிமணித் தண்டை யார்க்கும் செழுமல ரடியுங் கண்டான்” எனவரும் கந்தபுராணத்தில்.

சண்ட தண்ட வேஞ்சூர்:—

சண்டம் - வேகம்; தண்டம் - தண்டாயுதம்; அன்றியும் தண்டிப்பு எனினும் அமையும். இமையவரை சூரன் அனவரதமும் தண்டித்துத் துன்புறுத்தினன். கொடுமை பல புரிந்தானுதலின் “வெஞ்சூர்” என்ருர். அவன் மண்ணுலகையும் விண்ணுலகையும் கைக்கொண்டு அதிக்ரமித்தான்.

உ

முருகா

# பெரியபுராணம்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் புராணம்.

(மலர் 11- உளஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

**பரவையார் மணம்**

முன்னே திருக்கைலாயமலையில் ஆலாலசுந்தரர் விரும்பி நோக்கிய, உமையம்மையாரது சேடிகள் இருவரில் ஒருவராகிய கமலினியம்மையார், திருவாரூரில் உருத்திரகணிகையர் மரபிலே அவதரித்தனர். பரவையார் என்ற திருப்பேர் கொண்டு பனிமதியென வளர்ந்தனர்.

மானிளம் பிணேயோ தெய்வ வளரிள முகையோ வாசத்
தேனிளம் பதமோ வேலைத் திரையிளம் பவள வல்லிக்
கானிளங் கொடியோ திங்கட் கதிரிளங் கொழுந்தோ காமன்
தானிளம் பருவங் கற்குந் தனியிளந் தனுவோ என்ன

அழகு ஒருவடிவம் பெற்றதுபோலும், அறிவின் சிகரம் போலும், அன்பின் கருவூலம் போலும் விளங்கினர். இசையில் மிகவும் வல்லமை பெற்றிருந்தார். நாடோறும் தோழிகளுடன் வன்மீகநாதரை உள்ளங் குழைந்து உருகி வழிபாடு புரியும் நியமம் உடையவர்.

ஒருநாள் பரவையார் தோழியர் சூழ வானிலிருந் திறங்கிய மின்னற்கொடிபோல் திருக்கோயிலுக்கு வந்தார். அடியார்கள்

---

வேல் தோட்ட காவலனே:—

அண்டர்கள் அஞ்சி ஓடாமல், அவுணர் உயிர் ஓட எம்பெருமான் வேலை விட்டருளினர். காவலன் - காப்பாற்றுபவன்.

இந்தப் பாடல் மெல்லினத்தொற்று மிக்கு வந்த சந்தத்தா லாகியது. மிகவும் அழகிய இனிய ஓசை யுடையது.

### கருத்துரை.

வேலாயுதக் கடவுளே! திருத்தொண்டருக்குத் தந்த திருவடியை அடியேனுக்குத் தந்தருள்வீர்.

சூழ சுவாமிதரிசனஞ் செய்ய வந்த சுந்தரர் பண்டை ஊழ் கூட்டுவிக்கப் பரவையாரைப் பார்த்தனர். காதல் வெள்ளங் கரைபுரண்டு ஓடியது.

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேனென் றதிசயித்தார்.

"மலர்மிசை வாழும் பிரமன் அரிதின் முயன்று செய்த மணி விளக்கோ? உலகமூன்றும் செய்த புண்ணியத்தின் புது மலரோ? என்னை யாட்கொண்ட எந்தைபிரான் திருவருளோ?" என்று பலப்பல எண்ணி நின்றனர்.

பரவையாரும் பண்டைவிதி கூட்டுவிப்ப ஆரூரரை நோக்கினர்; கனவினுமிக்க கற்புடைய அம்மையின் உள்ளக் கோயிலுள் சுந்தரர் எழுந்தருளினர்.

முன்னேவந் தெதிர்தோன்று முருகனோ பெருகொளியால்
தன்னேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேயென் மனந்திரித்த இவன்யாரோ எனநினைந்தார்.

இவ்வாறு உள்ளம் பறிகொடுத்து பரமனைச் சேவிக்க உட்புகுந்தார். தம்பிரான்தோழர் அருகிலிருந்த அடியவர்களை "இவர் யார்?" என்று வினவினர். "சுவாமீ! இவர் பரவையார் என்பவர்; தேவர்களும் சேர்தற்கரியவர்; உருத்திரகணிகையர்" என்றனர். சுந்தரர் திருக்கோயிலினுட் சென்று சிவபெருமானைத் தொழுது, பரவையாரைத் தேடினர். "எந்தையாரருள் எந்நெறிச் சென்றதே" என்று வாடினர். தேவாசிரியன் மண்டபம் போய், "பரமன் பரவையைத் தருவார்" என்று இருந்தனர். பரவையார் ஒருவழியாகத் தமது இருக்கை சேர்ந்தனர். பரவையாம் அமுதினைத் தரவேண்டி கடலைக் கடையச் செல்வதுபோல் கதிரவன் மேற்கடலிற் புகுந்தான். அஞ்செழுத்தினை நினையாத வஞ்சகர் நெஞ்சம்போல் உலகம் இருள் சூழ்ந்தது. திருநீற்றின் திருவொளிபோல் திங்கள் தோன்றியது. திங்களும் தென்றலும் அவருக்குத் துன்பஞ் செய்தன.

பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடைச்
சிறந் தணைந்தது தெய்வநீர் நாட்டினில்
புறம் பணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம் பயின்றதெங்கோ தமிழ் மாருதம்.



"ஏ தமிழ்த்தென்றலே! இந்தக்கொடுமையை நீ எங்கே கற்றுக்கொண்டனை" என்று கூறி வருந்திக்கொண்டிருந்தனர்.

பரவையார் தமது திருமாளிகை சேர்ந்து தண்ணிலா மாடத்தில் மலர்ப்பள்ளிமேல் வைகி ஆரூரரையெண்ணி அயர்வார்; அருகிருந்த சேடியை நோக்கி, "நாம் கோயிலில் கண்ட அருளாளர் யார்?" என்று கேட்டனர். அவள் தொழுது, "அம்மையே! இருவர் தேடும் ஒருவர் வலிதில் ஆட்கொண்ட சைவ முதல் திருத்தொண்டர்; தம்பிரான் தோழர்; திருநாவலூர் ஆதிசைவர்" என்றனள். பரவையார் கேட்டு, "அவர் எம்பிரான் தமரோ?" என்று மேலும் அன்பு வளரக் காதல் நோயினால் கலங்கினர்.

இருவரையும் இம் மண்ணுலகில் பிறக்குமாறு கட்டளையிட்ட இறைவர் திருவாரூர்வாழ் அடியவர் கனவில் தோன்றி, "நாளை பரவையை சுந்தரனுக்கு மணஞ் செய்மின்" என்று கட்டளையிட்டு, நம்பியாரூரர்பால் வந்து, "பரவையை உனக்கு மணஞ் செய்யுமாறு அடியவர்க்கு ஆணையிட்டோம்" என்று அருளிச்செய்து, பரவையார்பால் சென்று, "நாளை உன்னை நம்பியாரூரன் மணங் கொள்வான்" என்று அருள் புரிந்தார்.

அடுத்தநாள் அரனர் ஆணையின்படி அடியார்கள் மிகமிகச் சிறப்பாகத் தம்பிரான்தோழருக்கும் பரவையாருக்கும் திருமணஞ் செய்தனர். நம்பியாரூரர் பரவையார்பால் "பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினர்".

ஒருநாள் அன்பர் புடைசூழ நம்பியாரூரர் திருக்கோயிலை யடைந்து தேவாசிரியன்மண்டபத்தில் சிறந்த திருத்தொண்டர்கள் கூடி இருப்பதனைக் கண்டார். "இத் திருத்தொண்டர்கட்கு அடியேன் தொண்டனாகும் நாள் என்றோ?" என்று எண்ணி ஏங்கி உள்ளே சென்று, இறைவனது திருவடிகளை வணங்கி வாழ்த்தினர். கண்ணுதற்கடவுள் அவருக்குக் காட்சி தந்து, "சுந்தரனே! நமது அடியவர் பெருமையைக் கேள்.

**திருத்தொண்டத்தொகை பாடியது**

பெருமையால் தம்மையொப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார் ஊனமேல் ஒன்று மில்லார்
அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்ப மார்வார்
இருமையுங் கடந்து நின்றார் இவரைநீ யடைவா யென்று

அருள் புரிந்து, "நமது அடியவர்களை வணங்கி அவர்கள்மீது பதிகம் பாடு" என்று பணித்தருளினர். சுந்தரர் பெருமானைப்

பணிந்து, 'திருத்தொண்டர்களது பெருமை இத் தன்மையது; இன்ன பண்புடையது என்று எவ்வாறு சிறியேன் உணர்ந்து பாடுவேன்? இதற்குரியவன் யானே? பாடும் பரிசினை யருள்வீர்' என்று வேண்டினர். எல்லையில் அருள்பெற்று உலகெலாம் உய்ய பரம்பொருள், "தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்தருளினர். மறையாயிரம் மொழிந்த மலர்வாயால் அடியெடுத்துக் கொடுக்கப் பெற்ற ஆரூரர், தேவாசிரியன்மண்டபம் போய் அங்கு குழுமியுள்ள அடியார்களைப் பன்முறை பணிந்து, கண்ணீர் சொரிய "திருத்தொண்டத்தொகை" என்னும் திருப்பதிகத்தை இனிது பாடினர்.

தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத இயற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாரூரில் நாள்தோறும் முப்போதும் தியாகேசப்பெருமானை வழிபட்டுக்கொண்டு வந்தனர். வேளாளர்குலமணியாகிய குண்டையூர்க்கிழார் என்பவர் நம்பியாரூரர்பால் அன்பு பூண்டு, அவரும் அடியாரும் அமுது செய்யும்பொருட்டு, பரவையார் வீட்டிற்கு நெல்லும், பருப்பும், சருக்கரையும் பிற உணவுப்பொருள்களும் தந்து மகிழ்வாராயினர். மழையின்றி எங்கும் பஞ்சம் ஏற்பட்டது. வயல்கள் விளையாமையால் வழக்கம்போல் சுந்தரருடைய அமுதுக்கு நிரம்ப உணவுப்பொருள்கள் வழங்குதற்கு முடியாமையால் ஒருநாள் மிகவும் உள்ளம் வருந்தி உணவின்றி உறங்கினர்.

**நெல் பெற்றது**

கண்ணுதற்பெருமான் கனவில் தோன்றி, 'சுந்தரன் பொருட்டு உனக்கு நெல் தந்தோம்' என்று அருளிச் செய்து, குபேரனிடம் கட்டளையிட, குண்டையூர் முழுவதும் மலைபோல நெல் குவிக்கப்பட்டது. பொழுது விடியும்பொழுது குண்டையூர்க்கிழார் எழுந்து, நெல்மலையைக் கண்டு அதிசயித்து, சிவபெருமானைச் சிந்தித்து 'இதனை எவ்வாறு எடுப்பது? யாவராலும் எடுக்கலாகாது' என்று கருதி, சுந்தரரிடம் அறிவிக்கும்பொருட்டு திருவாரூருக்குச் சென்றனர். இதனைச் சிவபிரான் அறிவிக்க சுந்தரமூர்த்திநாயனாரும் எதிரே வந்தனர். குண்டையூர்க்கிழார் அடிகளை வணங்கி, 'பெருமானே! தேவரீருக்கு அடியேன் புரிந்துவருந் தொண்டுக்கு இன்று தடைவர, பொன்மலையுடைய புராதனன் நென்மலை யருளினர். அது மனிதரால் எடுக்க முடியாது' என்று கூறினர். ஆரூரர் குண்டையூர் போய் விண்ணளவாக ஓங்கியுள்ள நெற்குவியலைப் பார்த்து வியப்படைந்து, அருகிலுள்ள கோளிலி என்ற திருத்தலத்திற்குச் சென்று, நெல்லினைத் திருவாரூருக்குச் சேர்க்குமாறு திருப்பதிகம் பாடியருளினர்.

நீள நினைந்தடியே னுமைநித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவா ளவள்வாடி வருந்தாமே
கோளிலி யெம்பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்
ஆளிலை,யெம்பெருமான் அவையட்டித் தரப்பணியே. [றேன்

விடையவர் திருவருளால் 'இன்றிரவு நமது பூதங்கள் பரவைவீடு மட்டுமன்றித் திருவாரூர் முழுவதும் நிறையுமாறு நெல்மலையைக் கொணர்ந்து சேர்க்கும்' என்று வானில் ஒரு ஒலி எழுந்தது. அதுகேட்ட தம்பிரான்தோழர் எம்பிரானை வணங்கி திருவாரூர் சேர்ந்தார். தியாகேசனை வணங்கி, பரவையாரிடம் நிகழ்ந்தது கூறி மகிழ்ந்தார். அன்றிரவு குன்றவில்லியின் உத்தரவின் வண்ணம் பூதகணங்கள் நென்மலையை எடுத்து பரவையார் வீட்டினை நிறைத்து, திருவாரூர் முழுவதும் நிறைத்தன. விடிந்தபின் பரவையார் திருவருளின் தன்மையைக் கண்டு அதிசயித்து, அவரவர்கள் வீட்டின் எல்லைக்குள் உள்ள நெற்குவியலை அவரவர்களே எடுத்துக்கொள்ளுமாறு பறை அறைவித்தனர். திருவாரூர் மக்கள் அனைவரும் திருவருளையும் பரவையாரது பரிவையும் புகழ்ந்து போற்றினர்கள்.

திருநாட்டியத்தான்குடியில் வாழ்கின்ற கோட்புலிநாயனர், சுந்தரமூர்த்தி நாயனர்பால் சென்று, திருவடி தொழுது, தம்முடைய ஊருக்கு எழுந்தருளுமாறு வேண்டினர்.

**கோட்புலியார் சந்திப்பு**

அவர் அதற்கு இசைந்ததனல் மகிழ்ந்து தன் ஊர் போயினர். பின்னர் தம்பிரான் தோழர் தியாகப் பெருமானை வணங்கி, விடைபெற்றுக்கொண்டு, பிற திருத்தலங்களையும் வணங்கிக்கொண்டு திருநாட்டியத்தான் குடியை யடைந்தனர். கோட் புலியார் வீதியையும், வீட்டினையும் அலங்கரித்து எதிர்கொண்டு வணங்கி தமது மனைக்கு அழைத்துக் கொண்டு சென்று, பொற்பீடத்து இருத்தி திரு

வடியை நீரால் விளக்கி, அப் பாததீர்த்தத்தை வீடுமுழுவதுந் தெளித்து, நறுமலர்களினுல் அருச்சித்தனர். தூபதீபங்காட்டி, மலர்மாலை சூட்டி வழிபட்டு திருவமுது செய்வித்தார். சேனுபதியாகிய அக் கோட்புலியார் தமது அருமைப்புதல்விகளாகிய "சிங்கடியார்" "வனப்பகையார்" இருவரையும் வணங்கச் செய்து, தாமும் வணங்கி "எம்மையாட்கொள்ளும் எந்தையே! அடியேனது புதல்விகளை அடிமைகளாகக் கொண்டு அருள் புரியவேண்டும்" என்று விண்ணப்பம்புரிந்தனர். சுந்தரர் அவ் விருவரையும் தமது புதல்வியராகக்கொண்டு, மடித்தலத்தில் வைத்து, கருணையுடன் உச்சிமோந்து, வேண்டியவை தந்து, சிவாலயத்திற்கு அவர்களுடன் சென்று, கோட்புலிநாயனுரைச் சிறப்பித்தும், தன்னை சிங்கடியப்பன் என்று வைத்தும் திருப்பதிகம் பாடினுர். திருவலிவலம் சென்று "வலிவலந் தன்னில் வந்து கண்டேனே" என்று பாடி திருவாரூர் சேர்ந்தார்.

பங்குனி உத்திரத் திருநாள் வந்தது. அக்காலை பரவையார் புரியுந் தானதருமங்கட்கு வேண்டும் செல்வத்தைக்கருதி, திருப்புகலூர் சென்றனர், அங்கு எழுந்தருளியுள்ள இறைவனை வணங்கி, கோயிலின்முன்றிலில் தங்கினுர்.

**புகலூரில் பொன்பெற்றது** திருவருளினுல் துயில்வர, அருகிருந்த செங்கற்களைக் கொணர்வித்து அடுக்கி, அதன்மேல் ஆடையை விரித்துப் படுத்துக் கண்துயின்றனர். உடன் வந்த அன்பர்களும் படுத்து உறங்கினர். உறங்கி விழித்துப் பார்க்கச் செங்கற்கள் அனைத்தும் பொற்கற்களாகத் திகழ்ந்தன. அதுகண்டு அனைவரும் அதிசயிக்க இறைவனுடைய திருவருளைச் சிந்தித்து, திருப்பதிகம் பாடினுர்.

தம்மையேபுகழ்ந்திச்சைபேசினுஞ் சார்வினுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின்
புலவீர்காள்
இம்மையே தருஞ் சோறுங் கூறையும் ஏத்தலாமிடர் கெடலுமாம்
அம்மையேசிவ லோகமாள்வதற் கியாதுமையுற வில்லையே.

அங்கிருந்து பொற்குவையுடன் புறப்பட்டு திருப்பனையூர் அருகில் செல்லும்போது, நிறைமதியும் குறைமதியும் அணிந்த நிமலன் நிருத்த கோலத்துடன் காட்சியளித்தருளினுர். "அரங்கிலாட வல்லாரவரே அழகியரே" என்று பாடி திருவாரூரை யடைந்தார்.



சுந்தரமூர்த்தி சுவாமிகள் நன்னிலம், திருவீழிமிழலை, அரிசிற்கரைப்புத்தூர், நறையூர்ச்சித்தீச்சுரம், திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருநாகேச்சுரம், சிவபுரம், திருக்கலயநல்லூர், திருக்குடந்தை, திருவலஞ்சுழி, திருநல்லூர்,

**பலதல தரிசனம்** திருச்சோற்றுத்துறை, திருக்கண்டியூர், திருவையாறு, திருப்பூந்துருத்தி, முதலிய திருத்தலங்களை வணங்கிக் கொண்டும், திருப்பதிகங்கள் பாடிக்கொண்டும் சென்று, திருவாலம்பொழில் போய் பெருமானை வழிபட்டு தங்கினுர். அன்றிரவு கனவில் பரமன்தோன்றி, "மழபாடிக்கு வர மறந்தனையோ?" என்று கூறியருளினுர். நம்பியாரூரர் விழித்தெழுந்து காவிரியைக் கடந்து வடகரைபோய், திருமழபாடி யடைந்து சிவபெருமானை அன்புடன் போற்றி,

"மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லா லினியாரை நினைக்கேனே"

என்று பாடினர். காவிரியின் இருமருங்கிலுமுள்ள தலங்களைத் தரிசித்துக்கொண்டு, திருவானைக்காவினையணுகி வணங்கினர். திருப்பாச்சிலாச்சிரமம் சேர்ந்து, இறைவனைத் தொழுது பொன் வேண்டினுர். இறைவன் உடனே தராமையால் "இவரலாது இல்லையோ பிரானுர்" என்று பாடினர். இறைவன் பொற்குவை யளித்தனர். திருப்பைஞ்ஞீலியையும் திரு ஈங்கோய் மலையையுந் தெரிசித்து கொங்குநாடு சென்ருர். காவிரிக்குத் தென் கரையில் விளங்கும் கொடுமுடி சென்று "மற்று பற்றெனக்கின்று" என்னும் நமச்சிவாயப் பதிகம் பாடினர். பேரூர், சென்று திருநடனகோலந் தெரிசித்தனர். திருவெஞ்சமாக்கூடல், திருக்கற்குடி, திருவாறைமேற்றளி, இன்னம்பர், புறம்பயம், ஆகிய தலங்களுக்குப்போய், அருகிலுள்ள திருக்கூடலையாற்றூர் செல்லாமல் விருத்தாசலம் செல்லுவாராயினுர். வழியில் இறைவர் ஒரு அந்தணனுகி வந்தனர். ஆரூரர் அவரை நோக்கி, "ஐயரே! திருமுதுகுன்றூருக்கு (விருத்தாசலம்) வழி எது?" என்று கேட்டனர். ஆண்டவர் 'இது கூடலையாற்றூருக்குப் போம்வழி' என்று கூறி வழிகாட்டிக் கொண்டு முன்னே சென்றனர். தம்பிரான்தோழர் அவரைத் தொடர்ந்து கொண்டு போயினுர். பெருமான் உடனே மறைந்தனர். 'அடிகளின் வழிபோந்த அதிசயம் அறியேனே' என்று சுவாமிகள் பதிகம்பாடி, கூடலையாற்றூர் போய் வழிபட்டு திருமுதுகுன்றமடைந்தனர்.

விருத்தாசலத்தில் பொன் வேண்டுமென நினைத்துப் பதிகம் பாடினர். பரமன் பன்னீராயிரம் பொன்னை யருளினர்.

**பொன்னை ஆற்றிலிட்டுக் குளத்தி லெடுத்தது**

வன்றொண்டர் 'எந்தையே! இப்பொன்னை திருவாரூரில் உள்ளவர் அதிசயிக்க அங்கு வரச் செய்யவேண்டும்' என்றனர். 'சுந்தரனே! இப்பொன்னை மணிமுத்தாநதியிலிட்டு திருவாரூர்க் கமலாலயக் குளத்தில் எடுத்துக்கொள்' என்ற ஒரு அசரிரிவாக்கு எழுந்தது. அதைக் கேட்ட ஆரூரர் பொன்னில் மச்சம் வெட்டி எடுத்துக்கொண்டு மணிமுத்தாநதியில் புகவிட்டு, 'என்னையனே! எளியேனை வலிதில் ஆட்கொண்ட திருவருளை இதில்அறிவேன்' என்றுகூறி தில்லையம்பதிசெல்லப் புறப்பட்டனர். இடையில் கடம்பூர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு சிதம்பரம் சேர்ந்தனர். நடேசமூர்த்தியைக் கண் குளிரக்கண்டு, பேரூரில் கண்ட நடனக்காட்சியைச் சிறப்பித்துப் பாடி, விடைபெற்றுக்கொண்டு, கருப்பறியலூர் போய் தெரிசித்தனர். மண்ணிப்படிக்கரை, திருவாளொளிபுற்றூர், கானாட்டுமுள்ளூர், எதிர்கொள்பாடி, . வேள்விக்குடி முதலிய திருத்தலங்களைச்சேவித்துக்கொண்டுதிருவாரூரையடைந்தனர்

பூங்கோயிலிற் சென்று புற்றிடங்கொண்ட புண்ணியனைப் போற்றி பரவையார் திருமாளிகைக்குச் சென்றனர். பரவையார் பணிந்து உபசரித்தனர். பின்னர் ஒருநாள் தம்பிரான் தோழர், 'மாதே! பழமலையப்பர் தந்த பொன்னை நதியிலிட்டேன். அதனை இங்கு கமலாலயக் குளத்தில் எடுத்துத் தருவேன் வா' என்றனர். பரவையார் 'இது என்ன அதிசயம்?' என்று புன்முறுவல் பூத்தனர். சுந்தரர் பரவையாருடன் கமலாலயக் குளத்தினையணுகி ஈசான திசையில் இறங்கி, அன்று இட்டதனை எடுப்பார்போல் தடவினர். பரமேச்சுரன் பாடலை விரும்பி திருவிளையாடலாக பொன் வருவியாதொழிந்தனர். பரவையார் 'ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடுகின்றீரோ?' என்று கூறினர். வன்றொண்டர் 'பழமலை நாதரை நினைத்து 'பொன்செய்த மேனியினீர்' என்று பதிகம் பாடலும், பொன் கிடைத்தது. அப் பொற்றிரளை எடுத்து கரைசேர்த்தனர். பரவையாரும் பிறரும் கண்டு அதிசயித்தனர். மாற்றுரைத்துப்பார்க்க, மாற்றுக் குறைந்திருந்தபடியால், மீண்டும் பதிகம் பாட மாற்று உயர்ந்தது. பொன் குவியலைப் பரவையார் வீட்டிற்கு அனுப்பிவிட்டு திருக்கோயில் சென்று தியாகேசனைத் தொழுது பாடினர்.

(தொடரும்)



# கெடுவான் கேடு நினைப்பான்

**வீரண்ணன்** என்றால் வெங்கூரில் எல்லோருக்கும் அச்சந்தான்; அவனுடைய கரிய பெரிய வடிவமும், முறுக்கிவிட்ட மீசையும், சிவந்த கண்ணும், கடிய பார்வையும், கொடிய செய்கையும் உடைய அவன் அந்த ஊரில் செல்வாக்குப் பெற்றிருந்தான். அவன் வைத்ததுதான் சட்டம். அவனைப்பகைத்து ஒருவரும் வாழ முடியாது. பிறருடைய உடைமை யென்றால் அவனுக்கு கரும்பு; புண்ணியச்செயல் அவனுக்கு இரும்பு; பாதகமென்றால் பாற்சோறு. இடியிடித்ததுபோன்ற அவனது குரலைக் கேட்டவுடன் ஆரும் அஞ்சி ஒதுங்கிவிடுவார்கள். பலகொலைகள் புரிந்தவன். உண்மை யென்பது அவனுடைய அகராதியில் கிடையாது. கருணை என்ற சொல்லுக்கு அவனுக்குப் பொருளே தெரியாது. "பாவம் என்றால் அது கருப்பாக இருக்குமா?" என்று கேட்பான். மனம் போன போக்கில் போய், கட்டறுத்த காளைபோல் உலாவுவான். இவ்வாறு வீரண்ணன் தனது அக்ரம சக்கரத்தைச் சுழற்றிக் கொண்டிருந்தான்.

வெங்கூருக்கு இருபது கல்தொலைவில் **கரபுரி** என்ற ஒரு சிறிய கிராமம்; அங்கு **தருமதேவர்** என்ற ஒருவர் வாழ்ந்து வந்தனர். அவர் பெருங் குடும்பத்தில் பிறந்தவர். நல்ல மனமும், சத்தியபுத்தியும் உடையவர். பகைவருக்கும் நன்மை செய்யும் பண்பு பூண்டவர். நன்றாகப் பெருமிதமாக வாழ்ந்தவர்.|கால கதியால் சிறிது வறுமையடைந்தனர். அந்த கரபுரிக்கு முப்பது கல் தொலைவில் ஒரு நண்பரிடம் மூவாயிரம் ரூபாய் கடன் வாங்கி யிருந்தனர். பிறருடைமைக்கு ஆசைப்படாதவராகிய தருமதேவர் பின்னர் பாடுபட்டு சிறிது சிறிதாகப் பொருளீட்டி மூவாயிரம் ரூபாயைச் சேர்த்தனர். அத்தொகையை எடுத்துக்கொண்டு புறப்பட்டார். இவர் பணந்தர வேண்டியவர் வாழும் ஊருக்கு மேலே கூறிய வெங்கூர் வழியாகத்தான் போகவேண்டும். வெங்கூர்வந்தவுடன் பொழுது போய்விட்டது அந்த இரவு தங்கி விடிந்ததும்எழுந்து குறித்தஇடம் போகலாமென்று எண்ணினர். தங்குவதற்கு வசதியான இடத்தை ஆராய்ந்தார். பரமசாதுவாகிய தருமதேவருக்கு கொடியபாவியாகிய வீரண்ணன் வீடு எதிர்ப்பட்டது. வீட்டுத்திண்ணையும் பெரிதாக இருந்தது. அதனால் அங்கு தங்கலாம் என்று எண்ணினர். திண்ணையின் மீது போய் இருந்தார். வழிநடந்துவந்த இளைப்பை ஆற்றிக் கொண்டார். வீரண்ணன் அவரைக் கண்டான்.

வீரண்ணன்:- ஐயா! தாங்கள் எந்தஊர்?

தருமதேவர்:- ஐயா! வணக்கம் நான் வாழ்வது கரபுரி; என்பேர் தருமதேவர்.

வீர:- ஓகோ கரபுரியா; எங்கு வந்தீர்கள்?

தரும:- நான் கோட்டூருக்குப் போகிறேன்.

வீர:- கோட்டூரில் யாரைப்பார்க்கப்போகின்றீர்?

தரும:- அங்கு ஒருவரிடம் பணம் வாங்கியிருந்தேன். அதனைக் கொடுக்கப்போகின்றேன்.

வீர: அப்படியா? எவ்வளவு பணம். தரும:- மூவாயிரம்.

வீர:- ஐயா! தங்களுடைய நல்லகுணங்களை எண்ணினுல் மெத்த சந்தோஷமாக இருக்கின்றது. தங்களைப்போன்ற உத்தமர்களும் இருப்பதனுல் உலகில் ஏதோ இவ்வளவாவது மழை பெய்கின்றது. கொடுத்தவன் அடுத்தடுத்து நடந்து கேட்டாலும் வாங்கியவன் பணந்தராமல் ஏமாற்றிவிடுகின்றுன். தாங்கள் கொடுத்தவனைத் தேடிக்கொண்டுபோய் தருகின்றீரே? தங்களுடைய மேலான குணத்தை நான் மிகவும் மெச்சுகின்றேன்.

தரும:- ஐயா! இதில் மெச்சவேண்டியது ஒன்றுமில்லை. கடன் என்று வாங்கினுல் அதனைத் தலையால் நடந்து தரவேண்டாமா? வாங்கிய கடனைத் தராதவர்கள்தான் மறுபிறப்பில் மாடாகப் பிறந்து உழைத்துக் கடனைத் தீர்ப்பார்கள். கடமையைச் செய்கிறேன்.

வீர:- தனக்குள் (முக்காலனுவுக்கு மூன்று கொலை செய்யும் நமக்கு இன்று நல்ல வேட்டை. மூவாயிரம் ரூபாய் வந்து சேர்ந்தது. இந்தசாம்பிராணி நல்ல வேளையாக நம்ம வீட்டிற்கு வந்துசேர்ந்தான். புறப்பட்டபோதே ஒருபிடி அரிசியும் வாய்க்குப் போட வாங்கி வந்திருப்பான் சரி சரி; இவனை இன்று சரிப்படுத்திவிட வேண்டும். எமன் கையில் அகப்பட்ட உயிர் தப்பினுலும் தப்பும்; நம்மிடம் வந்து அகப்பட்ட ஆள் தப்பமாட்டான்) என்று எண்ணி "ஐயா! தாங்கள் மிகவும் உத்தமமானவர், தங்கள் சந்திப்பு கிடைத்தது எனது நல்லகாலந்தான். எங்கள் வீட்டுத் திண்ணையில் தாங்கள் பட்டினியாகப் படுக்கலாமா? எழுந்து உள்ளே வாருங்கள். உணவு செய்துகொண்டு படுத்துக்கொள்ளுங்கள்.

தரும:- ஐயா! மன்னிக்கவேணும்; இன்று சோமவாரம்; நான் இரவில் உணவு செய்வதில்லை; விரதம்.

வீர:- அப்படியானுல் பாலும் பழமுமாவது சாப்பிடுங்கள். சும்மா படுக்கக் கூடாது.

தரும:- தாங்கள் வற்புறுத்துவதனுல் சிறிது கொடுங்கள்.

வீரண்ணன் பாலும்பழமுங் கொணர்ந்து தந்தான். தருமதேவர் தனக்குள் 'முன்பின் தெரியாத இடத்தில் எவ்வளவு அன்புடன் உபசாரம். இவர் மிகவும் நல்லகுணம் வாய்த்தவர்போலும். ஆங்காங்கு இத்தகைய உதாரகுணமுடைய உத்தமர்களும் இருக்கத்தான் செய்கின்றுர்கள். நமது நல்ல புண்ணியம் இந்தஇடம் கிடைத்தது' என்று எண்ணி மகிழ்ந்தார். வீரண்ணன் தந்த பாலும் பழமும் அன்புடன் ஏற்றுக்கொண்டார். "தங்களுக்கு எனது நன்றி உரியதாகுக. தாங்கள் போய் சாப்பிடுங்கள்" என்றுர்.

வீர:- ஐயா! காலம் நன்றுக இல்லை களவும் மோசமும் எங்கும் அதிகம் தாங்கள் பணத்துடன் திண்ணையில் படுப்பது சரியன்று. நடையில் படுத்துக்கொள்ளுங்கள்.

தரும:- இல்லை; வேண்டாம். நான் இங்ஙனமே படுத்துக் கொள்ளுகின்றேன். காற்ருேட்டமாக இருக்கின்றது. இந்த பணத்தை உள்ளே வையுங்கள். விடியற்காலை பெற்றுக் கொள்ளுகிறேன்.

வீர:- ஆகா! அப்படியே செய்கிறேன். (என்று பணப்பையைவாங்கி உள்ளே பெட்டியில் வைத்தான். பாற்பானைக்குப் பூனையைக் காவல் வைத்ததுபோலாயிற்று.)

(தொடரும்)

# "திருப்புகழமிர்தம்" சந்தா விவரம்.

ஆண்டு 1-க்கு தபாற்கூலி யுள்பட } இந்தியா, சிலோன், ... ரூ. 2-0-0
தனிப்பிரதி கிடைக்காது.

1. சந்தாதாரராகச் சேர விருப்பமுள்ளவர்கள் ஆண்டுக்கட்டணத்தை முன்னதாகவே செலுத்த வேண்டும். மணியார்டர் மூலம் சந்தாவைச் செலுத்துபவர்கள் மணியார்டர் கூபனில் விலாசத்தை விவரமாக எழுதி யநுப்பவேண்டும்.

2. நமது பத்திரிகை ஒவ்வொரு சித்திரையினின்று தொடங்கும். ஆதலால் நேயர்கள் எந்தத் திங்களில் சந்தாதாரராகச் சேர்ந்தாலும் அவ்வாண்டு சித்திரையினின்றே இதழ்கள் அநுப்பப்படும். ஒரு ஆண்டுக்குக் குறைந்த சந்தா கிடையாது.

3. நமது பத்திரிகை பிரதி இங்கிலீஷ் மாதம் 16-ந்தேதி தபாவில் சேர்க்கப்படும்.

4. இதழ் கிடைக்கப்பெறுத சந்தா நேயர்கள், அத் தமிழ் மாதம் 15-உக்குள் எழுதிப் பெறவேண்டும். அதற்குமேல் எழுதுவோர் 0-3-0 தபால் ஸ்டாம்பு அனுப்பினுல்தான் வேறு பிரதி அனுப்பப்படும். இதழ்கிடைக்கப் பெறுதவர்கள் தமது ஊர் தபாலதிகாரிகளுக்குந் தெரிவிக்கவேண்டும். காரியாலயத்தில் பலமுறை சரிபார்த்து இதழ்கள் தபாலில் சேர்க்கப்படுவதால் காரியாலயத்தில் தவறு நேர இடமில்லை.

5. விலாசமாறுவோர், தமது மாறுதல் விலாசத்தை உரிய காலத்திற்குள் நமது காரியாலயத்திற்கும், போஸ்டாபீசுக்கும் தெரிவிக்கவேண்டும். இன்றேல் பழைய விலாசத்திற்கே அடுத்த இதழ் அநுப்பப்படும். அதற்கு யாம் பொறுப்பாளியல்ல.

திருப்புகழமிர்தம் காரியாலயம்,
144 சாமிநாய்க்கன் தெரு, சிந்தாதிரிப்பேட்டை,
:: மதராஸ் 2 ::

---



---

**புத்தக வரவு**

உணவுநெறி: ஆசிரியர்: தமிழ்ப் புலவரும் மருத்துவப் புலவருமாகிய சிவ. முருகேச செட்டியார். விலை 0-8-0. கிடைக்குமிடம்: சிவ. முருகேச செட்டியார், தமிழ்ப்புலவர், திண்டிவனம்.

Printed & Published by *M. Madhusoodana Sivam* at the Thirup pugal Amirtham Press, 144 Swaminaicken Street, Chintadripeta, Ms. 507, 16-4-47. 3000. Editor: Sri *Kirupanandavari*.

